உ

சிவமயம்.

பதினெண்சித்தர்களில் மகாமகத்துவம்பொருந்திய

# போகமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# ஞானசாகரம் - ௫௫௭.

இஃது.

மதுரையில் வயித்தியஞ்செய்யும்

கருப்பையாநம்பி யவர்களால்

பற்பலஏட்டுப்பிரதிகளைக்கொண்டு

பிழையறப்பரிசோதித்து

பிரதிக்கிணங்க

வே - குமாரஸ்வாமிமுதலியாரது

வாணீவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1892.



இதன்விலை - அணா — அ.

சிவமயம்.

# போகர்-ஜெனனசாகரவகராதி.

| செய்யுண்முறை. | பக்கம். |
|---|---|
| பாயிரங்காப்பு | ௧ |
| சிருஷ்டியின்கலைகள்கூறல் | ௨ |
| சிருஷ்டியின் அட்சரங்கூறல் | ௫ |
| சிருஷ்டிக்குரியலோகங்களுங்கலைகளுங்கூறல் | ௭ |
| உருத்திரர்சம்மாரங்கூறல் | ௨௧ |
| கணேசன்சக்கரத்தைவிழுங்கியதுகூறல் | ௨௩ |
| திருப்பதியுற்பவங்கூறல் | ௨௫ |
| சுப்பிரமணியர்உற்பவங்கூறல் | ௨௬ |
| தசரதனுற்பவங்கூறல் | ௨௭ |
| இராவணனுற்பவங்கூறல் | ௨௮ |
| இராமனுற்பவங்கூறல் | ,, |
| இராவணசம்மாரங்கூறல் | ,, |
| இராமேஸ்வரமுற்பவங்கூறல் | ௨௮ |
| திருவரங்கமுற்பவங்கூறல் | ,, |
| பாண்டவர்களுற்பவங்கூறல் | ௩௦ |
| ஜெகன்னாதமுற்பவங்கூறல் | ௩௨ |
| கல்-பெண்ணுருவானவைகூறல் | ௩௩ |
| தன்னையறியும்விபரங்கூறல் | ௪௩ |
| மலைவளங்கூறல் | ௫௧ |
| மலைப்புமைகூறல் | ௫௩ |
| கெந்தகபருவதத்தின்பெருமைகூறல் | ௫௫ |
| தன்னுட்டலங்கள்கூறல் | ௬௩ |
| சதுரகிரியின்பெருமைகூறல் | ௬௬ |
| அழகர்மலைவளங்கூறல் | ௭௬ |
| அண்டபிண்டமறியச்சாட்சிகூறல் | ௮௪ |
| மிலேச்சருண்டானவைகூறல் | ௮௫ |
| ஆதிநந்தி | ,, |
| பத்தியங்கூறல் | ௮௬ |
| கற்பங்கூறல் | ௮௭ |
| பாஷாணவேலைகூறல் | ௯௩ |

# போகர்ஜெனனசாகரவகராதி.



அகராதி—முற்றிற்று.

சிவமயம்.

இஞ்சு-கொருளாபுரம்

# அருணைஜலகுருகவியாரால்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

---

### ஆசிரியப்பா.

சீர்மலிதிலகிர் றிக்காலனைமாய்
ஏர்மலிந்திரு மிணையிலானருளால்
அணிமாவாதி யஷ்டசித்திகளுந்
றணிகொளுமியம நியானவஷ்டாங்க
யோகமும்வாய்க்க வொருபதினெண்மருள்
போகமாமுனிவர் புகன்றவிந்நூலை
இடம்பெறவோங்கு மிருநிலமதனுள்
கடம்பனைமணக் குழுமாலயவில்
வைதவாயினர்முதன் விளங்கால்வருணம்
ஓதுதற்கரிய வுயர்மண்டபத்திற்
பொற்புளோர்மகிழ புத்தகவர்த்தகம்
இப்புவிமதிக்க விழைத்திடும்புனிதனுங்
கந்தராஜ சுகுணனென்போனும்
பக்தமாய்க்கேட்ட பண்பதுகொண்டே
ஆயுருவேதத் தமர்ந்திசைக்யன்
தாயினுமினிய தயாளுவாகியோங்யன்
கருப்பையாநம்பிச் சாலையென்றனசொ
பொருட்பெனவெண்ணிப் பக்தியுன்மகிழ்வாய்
பற்பலவேட்டிப் பிரதிகளைக்கொண்டு
ஏற்படவெழுதி யிந்நனைவதன்னைச்
சென்னையம்பதியிற் றிகழ்காராளருள்
நன்னயத்தோக்கலா நக்கவென்றோங்கும்
குமாரஸ்வாமியெனும் குருபானமைத்த
வாணிவிலாச வச்சியந்திரத்தில்
அச்சிட்டிலகெலா யமர்ந்திடச்செய்த
உச்சிதமகமதா வுயர்குலத்துற்ற
மருத்தெறுமிந்திரன் மருவிசித்திரைப்
பகுப்பவரெவரோ பாரமிசைமேதா

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.



உ

சிவமயம்.

# போகமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# ஜெனனசாகரம் - ௫௫௰.

பாயிரம் - காப்பு.

அண்டரண்டங்கடந்தபொருள்நிற்குணமாய்நின்ற
அளவில்லாநிர்மலமேசூட்சாசூட்சம்
எண்டிசையும்பரந்துநிரஞ்சனமேயாகி
ஏகசச்சிதானந்தப்பாலஞானம்
கொண்டதொருபூரணமெந்நாளுங்காப்பு
குறியானவொளியாளும்வெளியாளுங்காப்பு
புண்டரீகவெளியொளிப்பாள்சுழினைமோனம்
போதமுறும்வேதாந்தங்காப்புதானே. (௧)

இதுவுமது.

ஆதியந்தம்வாலைகுருபாதம்போற்றி
அம்பிகையாள்சேயர்சித்தர்பாதம்போற்றி
நீதியென்றகாலாங்கியையர்பாதம்
நிலைபெறவேவணங்கிநன்றாய்தீட்சைபெற்று
சோதியென்றநதிமூலஞ்செப்பக்கேளு
சொல்லரிதாய்நின்றதொருசித்தர்மூலம்
ஓதிநின்றகணபதிவல்லபையின்மூலம்
உற்றுநின்றமூலமெல்லாமுரைக்கின்றேனே. (௨)

### நான்முகம்-தானெங்கூறல்.

உரைக்கிறேனுதிசித்தனொருவனப்பா
வொருவனுமேவில்லவடாப்பரமம்பரமம்
கரைக்கிறேனதிலிருந்தகலைபிறந்துக்
காலாகிப்பிரிந்ததிதிண்டமாகி
நிரைக்கின்றவாணுமதுமெபண்ணுமாகி
நிறைவாகப்பதினாறுகலையும்பூண்டு
திரைக்கிறேனவனொருத்தியல்லாலில்லை
தேவியுடசிருஷ்டிப்பைச்செப்பக்கேளே. (௩)

கேளப்பாவவளுடையஞானத்தாலே
கெடியாகத்தான்பிரிந்தமூலம்பார்த்து
ஆளப்பாவந்தவொருமூலத்தாலே
வழகாகசிருஷ்டித்தாளொருவனைத்தான்
வாளப்பாவொருவனுந்தான்வந்தசகத்தால்
வந்தவழிசொல்லுமென்றுன்வாலையைத்தான்
யாளப்பாவொருவனுமேயில்லையில்லை
யாப்பரம்மமூலத்தாற்பிறந்தேன்பாரே. (௪)

——(*)——

### சிருஷ்டியின்கலைகள்கூறல்.

பாரப்பாப்ரம்மமென்றசோதிக்குத்தான்
பரிவானகலையது வாயிரத்தெட்டாகும்
சேரப்பாநான்பிறந்த கலைகள்தானுஞ்
சேர்ந்ததடாவன்பத்தி யொன்றுங்கூடி
ஆரப்பாவாணுமொரு பெண்ணுமான
வட்சரமுமதுதானு மைம்பத்தொன்று
வேரப்பாவொன்றுனே வட்சரத்தால்
விதமெல்லாமறிந்ததடா யானுங்காணேன். (௫)

காணப்பாவைம்பத்தி யொன்றுக்குத்தான்
கண்ணாகத்திறந்ததடா வொன்றுதானுங்
தோணப்பாவந்தவொரு கண்ணினாலே
துலங்கவேயான்பிறந்த மூலங்கண்டேன்

நாணப்பாகருவிதானாகாதென்றும்
நாதமென்றவோசையது வேணுமென்றும்
பூணப்பாவதிற்சிறிது கலையிருந்து
பூரணமாயுந்தனையுஞ் சிருஷ்டித்தேனே. (௬)

சிருஷ்டித்ததலையதுதா னெத்தனையோசொல்லுந்
திரண்டதொரு பிரமதுதெரியச்சொல்லு
மட்டித்தகலையதுதானேமூன்றப்பா
வதிகாரமோகமதாற் சிருஷ்டிசெய்தேன்
வட்டித்தகலையதுதான் வாலையாகி
வந்ததடாமுகமைந்து கையும்பத்தாய்
எட்டித்தவுனக்கெனக்கு மூலமப்பா
யேகபரஞ்சோதியடா யெண்ணிக்கொள்ளே. (௭)

கொள்ளவேமைம்மூன்று கலைக்குத்தானுங்
குறியானவெளியொளிதா னதுதான்சொல்லும்
விள்ளவேவெளிதானீயல்லாவில்லை
விளங்கிநின்றவெளியதுதான் யென்னுக்குள்ளே
நள்ளவேயிதையறிவ தேதுமைந்தா
நானறியச்சோதியென்ற கண்ணேவேணும்
வள்ளவேசோதியென்ற கண்ணேசொன்னால்
வகைமோசமெத்தவப்பா சொல்லொணாதே, (௮)

சொல்லாதேசோதியது யில்லாவிட்டாற்
சூட்சமதுவறிவதுதானேதுமேது
கல்லாணயிருளதுதான் வந்துமூடுங்
கண்டத்துமிருந்தனா லாவதேது
நல்லானசோதியது ஞானமாகும்
ஞானமென்றகண்போனா லுயிரேயில்லை
வல்லானகண்ணையுந்தான் வாயிற்சொன்னால்
வகையேதுமுனக்கில்லை வழங்கினேனே. (௯)

சிருஷ்டியின் அக்ஷரங்கூறல்.

வழங்கினேன்சிவனென்றுஞ் சிவன்தானென்றும்
வல்லதோராட்சரமூன் றிருக்கவேதான்

களங்கமறவென்னையும்நீ கேட்டதென்ன
கடைதலையுமானதுவு மதுவேயாகும்
துலங்கவேநால்மூன் றட்சரமேயானால்
தோன்றிநீயெதுவரைக்கு மட்சரமேசொல்லும்
விளங்கவேயைம்பத்தி லொன்றிலப்பா
விளங்கின்ற வட்சரந்தா னொன்றுதானே. (௰)

தானென்றவட்சரந்தா னதுதான்சொல்லாய்
தப்பிலையோயினிமேலட்சரம்வேறுண்டோ
வேனென்றப்ரம்மமதுக் காயிரத்தெண்கலைதான்
விடும்பாலதுவுமொரு வுயிருமாச்சு
நானென்றப்ரம்மத்தின் கண்ணுமானே
னாட்டினேன் கால்தலையோடுள்ளந்தான்
ஊனென்றவட்சரந்தான் வேணுமென்று
னுபிராணப்ரம்மத்து னூணிப்பாரே. (௰௧)

ஊணியதுபார்க்கவென்றாற் கண்டானெங்கே
யுடம்பதனைக்கண்ணாலே பார்ப்பதுண்டோ
ஆணியதாயிருப்பிடத்தைச் சொன்னாயானா
லறிந்துநானத்தவழி திறந்துப்பார்ப்பேன்
தோணியதோர் காலாலேயறியவேணும்
துலங்கிவிடுமெப்பவல்லோ ஞாலமெல்லாம்
வாணியென்றகாலாலே யறியாவிட்டால்
வல்வினமும்பெய்த்தவடா தலைகாணாதே. (௰௨)

காணாதுவென்றுசொல்லி யுணர்த்திவிட்டாய்
காண்பதுதானினியேது மெதைநான்காண்பேன்
தோணாதுகபடமதாய் சொன்னாயானால்
துணையொருவரில்லையினி நீயுநானே
பூணாதுயிருந்துவிட்டா லறிவதென்ன
பிழைமோசஞ் செய்வேனான் சும்மாய்ச்சொல்லு
கோணாதுகோணமடா முக்கோணமப்பா
கொடிதானசுழிதானே கொளுந்தும்பாரே. (௰௩)

தேடினேனுதாரமொன்று மில்லை
திரண்டிருண்ட ப்ரம்மத்தில் நின்றுக்கொண்டு
சாடினேனந்திசைசத்தி சமைத்தேனப்பா
சலனமில்லாப் பீடமதாய்ப்போட்டேனென்றே
கூடினேன்வொருத்திதனை சிரசிற்கொண்டேன்
கூட்டோடேதானணைந்தேன் வொருத்திதன்னை
நாடினேன்வொருத்திதன்னை யேவற்காக
நாயகியாள்பாதமதில் வைத்திட்டேனே. (௰௮)

வைத்திட்டேன்சத்திகளோ நாலுபேர்கள்
வகையானவாதிசத்தி பராசத்தியோடு
மொய்த்திட்ட ஞானசத்திவாலைசத்தி
முதலானநால்வருக்கும் பங்காயிந்து
சித்திட்டமுகம்நாலு மவரவர்க்குச்
சமபாகஞ்சேர்ந்து நானங்கேநின்றேன்
ஒத்திட்டேனொருமுகமும் ப்ரம்மத்தோடே
யுறவாக ப்ரம்மமுகமானேனப்பாரே (௰௯)

பார்க்குமென்ற பீடசத்திருபந்தானும்
பரிவானகலையிருநூற்றியிருபத்திநாலாம்
ஏர்க்குமென்றசத்திதான் பிரிதுவியுமாகு
னென்னசொல்வே னவளுடையவுடவள்ப்பம்
மார்க்கமென்றவப்புவது ரத்தமாச்சு
மைந்தனேதேயுமென்ற பிந்துமாச்சு
தீர்க்கமென்றபுல்பூடு விருட்சமெல்லாந்
திறமானரோமமது வாய்வுமாச்சே (௨௰)

ஆச்சுதென்றேயவளுடனே கலந்ததாலே
யாகாசமுதலாகவஞ்சுமாச்சு
வாச்சுதென்றபொன்மேரு*ரசிதமேரு
வல்லபையாள்தனமிரண்டு மாகுமாகும்
நீச்சுதென்றே யானுமேசேர்ந்தபாகம்
திருவாணிவெள்ளியிட மெருமாச்சு

* ரசிதமேருவென்பது வெள்ளிமலையெனக்கொள்க

காச்சுதென்றசத்திகிரி சிவகிரியுமாகுங்
    கைலாசகொடிமுடியு மிதுதான்காணே. (உக)

காணவேரத்தினமா பரணமாச்சு
    கனமானமேகமது வஸ்திரமாச்சு
பூணவேஜெகச்சோதி சொல்லப்போகாப்
    பூரணமாய்விளைந்ததெல்லா மவருக்குள்ளே
ஆணவேயாதிசத்தியாதிவஸ்து
    வவளல்லாலதிகாரமார்க்குமில்லை
தோணவேயானுமிவள் மூலந்தன்னை
    துலங்கவேகண்டதில்லை யென்றாற்றானே. (உஉ)

நானென்றலட்சுமியுமிவள்தானாகுந்
    தாங்கியதொரட்சரமும்- அவ்வும்-உவ்வும
வேனென்றபிராணசத்தி கிரியாசத்தி
    வேதாந்தசத்தியொடு மூன்றுமாச்சு
நாமென்றமேருவதிலிருந்துக்கொண்டு
    நாட்டினேனனேகவித சிருஷ்டிப்பாகந்
தேனென்றப்ரம்மத்தாச் சரியம்பார்த்து
    தேவிளையப்போற்கலையிரிந்துசிருஷ்டித்தேனே. (உங)

———(*)———

## சிருஷ்டிக்குரியலோகங்களுங் கலைகளுங்கூறல்

தேறுனகைலைக்குத் திரைவெட்டாகுந்
    திக்கெட்டுபாலகர்க்குங் கலைவெட்டாகும்
வாறுனவயிரவரு மிவர்தானாகும்
    வல்லதொருவட்டசித்தர் காத்திருப்பார்
தாறுனகைலமலைபதினைச்சுத்தித்
    தான்வரிக்குங்கிரிவெட்டுப்வாளமுட்ட
பாறுனவாயிரத்தெண் கோடிகாதம்
    பரப்பாகநிற்குமிந்த விதிதானே.

வீதியும்நால்வீதியுமிப்படியேயாக
    விளங்குசப்தலோகமுமே மிதின்மேலாகும்

ஆதியாமேலோகமேழுக்குந்தா
னறிதானபூலோகம் வாய்வுலோகம்
சாதியாம்வருணனாட்டலோகமொன்று
சாற்றுகிறேன் கதிர்மதியின்லோகமொன்று
நீதியாம்நட்சத்ரலோகமொன்று
நிகழ்த்துகிறேன் சத்தியலோகம் மேலாமே. (௨௫)

ஆமென்றலோசமது மேலதாகு
மதிலிருந்துகீழேழுலோகமாகும்
ஓமென்றபரம்மகலையாயிரத்தெட்டு
மொங்கியேயீரேழும் நிறைந்திருக்கும்
நாமென்றசக்திபதி னெட்டுபேர்க்கும்
நலமானகலைகள்பதினெட்டாயிருக்கும்
வாமென்றதுவாரபாலா னெட்டுபேர்க்கும்
வகையானகலையதுதானெட்டுமாச்சே. (௨௬)

ஆச்சப்பாயிந்திரர்க்கு கலையிரேழு
மழகானப்ரம்மகலையெட்டொன்றாகும்
வாச்சப்பாவிஷ்ணுவுக்கு கலையிராறு
வளமானருத்ரர்கலை பதினைந்தாகும்
மூச்சப்பாமுப்பத்து மூன்றுகோடி
முறையானதேவர்கலை மூன்றாறாகும்
பேச்சப்பாநாற்பத்தெண்ணாயிரந்தான்
போனரிஷிகளுக்கு நாற்பத்தெட்டே (௨௭)

எட்டானஅஷ்டதுர்க்கை கலைதானெட்டா
மியலானசப்தகன்னி கலைதானேழாம்
அட்டானலட்சுமியாள் மெட்டுபேர்க்கு
மழகானகலைபதுவே பன்னிரண்டாகும்
துட்டானநவக்கிரகம் வொன்பதுக்குந்
துடியானகலையிருபத்தேழுமாகும்
வட்டானகதிரவர்க்குப் பதினாறாகும்
வளர்மதிக்குபதினைந்து கலையுமாமே. (௨௮)

ஆகுமேபிரமனன்ன வாகனத்திற்கு
வழகானகலைமூன்றுமாகுயாகும்

திஷ்டித்தேன்வடக்கிலுள்ள மனிதர்க்கெல்லாந்
தெளிஞானமடைவதற்குக் கிடையாதென்றே
அட்டித்தேன்தெற்கிலுள்ள மனிதர்க்கெல்லா
மிறவாதயோகமுடன் ஞானமுண்டாம்
ஒட்டித்தேனவர்களுக்குக் கபடஞ்சூது
மோகோகோவாசையது மெத்தவுண்டு
மட்டித்தேன்மனமது வழுமறைத்துநின்றால்
மகத்தானசித்தனாய் மருவுவானே. (௧௩)

மருவுவானாசித்தனான் தானாகும்
வளமானபரப்ரம்மம் நான்தானாகும்
உருவானப்ரம்ம கலையேந்தேனார்க்கு
முசத்திபெற்றார் வல்லவர்கள்தவத்தினாலே
கருவானவொன்றுபத்து வாயிரமுகமாகக்
கண்டல்லோகையெல்லா மிறைந்தாரப்பா
தருவானகையெலது வழுந்தக்கண்டு
தாக்கியேகர்த்திற்குப் போதித்தேனே. (௧௪)

தேனென்றதேவர்களைத் திரட்டிக்கூட்டித்
தென்றிசையிலே கவிட்டேனாயிரம்பேர்
நானென்றரிஷிகளிலே யேழுபேரை
நாட்டியேசெல்லுமென்று நவின்றேனப்பா
வேனென்றதிசை யெங்குமிப்படியேசொன்னேன்
விதமானதேவரெல்லாம் விபரங்கேட்டுத்
தானென்றயுகம்நாலு மாறிமாறித்
தான்வருமேதிசைசுத்தி தாக்கிப்பாரே (௧௫)

பாரப்பாகலியுகத்து மனிதரெல்லாம்
பரிவானஞானமது வதிகமாகும்
காரப்பாகைலாசந் தேடிக்கொள்வார்
கருவாகவந்தவர்க்கு கருணையீவேன்
சீரப்பாநீங்களுந்தா னங்கிருந்து
சிவவடிவாய்ச்சித்தாடி சேரக்கேளு
ஆரப்பாகலியுகந்தா னந்தமானு
லாச்சரியந்தைதட்டி வந்துசேரே (௧௬)

சேரென்றே னதேவரெல்லா மலைத்துநின்றார்
  செயமான ருத்திரனைக் கூட்டிவந்து
வாரென்றே றகுறிபத்திலவதாரமாக்கி
  வழகாகவக்கினியில் மூழ்கவென்றே
வாரென்றே வல்லசித்தரென்றுசொல்லி
  விழியாகவோர்கலையு மவனுக்கீந்து
தேரென்றே யகஸ்தியா வென்றுகூறித்
  திறமானதென்பொதிகைசெல்லெனறேனே (கஎ)

செல்லென்றே னவன்றானு மென்னைப்பார்த்து
  செயமானபிரணவமே வேணுமென்றான்
அல்லென்றே னறுமுக மாகவந்து
  வப்பவலலோவனுக்கிரகஞ்செய்வேனென்றேன்
நல்லென்றே றனல் வேதசாஸ்திரமெல்லாம்
  நலமானசதகோடி மந்திரமெல்லாம்
வெல்லென்றேன் வேதியராயிருந்துகொண்டு
  விபரமதாயகஸ்தியர்க்குச் செப்பினேனே. (கஅ)

செப்பினேனிருநூறைந்த நாடேயென்றுஞ்
  சிப்பானகதிரவனைத் திருப்பென்றேன்யான்
ஒப்பினேனோர்கலையைக் கொண்டுசென்று
  வுபமானதெக்ஷணத்திற் பொதிகைசேர்த்து
அப்பினேன்தேவர்களெந்தனையும்பார்த்து
  வாச்சரியங்கைலாச தேகத்தோடே
நப்பினேறான் போகேனென்றுசொன்னார்
  நாட்டிலேகாருநுவாய்ச் செய்யென்றேனே. (கக)

செய்யென்றுசொன்னதுவுஞ் சரிதானப்பா
  செகத்திலேயிறந்தாலு மூடமாமோ
மெய்யென்றபொருளை யெப்படிதான்காண்பேன்
  விதமாகச்செப்பிவிட்டாற் போவேனென்றான்
மையென்றவிழியாளைப் பூசைசெய்தால்
  வழியென்றகிருபையுந்தான் காட்டுவாள்பார்
ஐயோவென்றநேகம்பேர் வருவாரப்பா
  வாதரித்துவப்பவல்லோ கண்டுக்கொள்ளே (௨௰)

சொள்ளென்றேன் தேவரெல்லாமால்லொன்றாக்
குவலயத்திலவதாரஞ் செய்துக்கொண்டார்
விள்ளென்றேகனகஸ்தியனை யரக்கர்கூடி
வேதனைகள் செயதார்கனொருவனென்று
வள்ளென்றேயெந்தனையு மனதிலுன்னி
மாய்கையாய்தியானமது செய்துக்கொண்டான்
தெள்ளென்றே நந்தியைத்தானும் பார்த்து
திறமானவிடுக்கமது தீரென்றேனே. (௬௧)

தீரென்றேனந்தியுந்தா னென்னைப்பார்த்து
தீர்ந்துநான்வருகவோ யிருக்கவோவென்றான்
காரென்றேனகஸ்தியனங் குள்ளமட்டும்
கவிமுடிக்குமீயுந்தான்வரலாமென்றேன்
தாமென்றவம்பரத்தாள் மூலைகேட்டான்
தவஞ்செய்தாலப்புரமேதருவேனென்றேன்
வீறென்றேனந்தியுந்தான் சுடர்வாட்கொண்டு
வேகமதாய்வந்துவினை தீர்த்திட்டானே, (௬௨)

தீர்த்துவிட்டானந்திக்கு ப்ரம்மபட்டந்
திரமதாய்யீந்துவிட்டேன் சிலநாளாண்டான்
காத்துவிட்டபிரமனுக்கு விஷ்ணுபட்டங்
கருணைபெறவே யீந்தேன்வெகுநாளய்யா
பார்த்துவிட்டபாப்ரம்ம ரிஷிவரமேகேட்டான்
பரிவாகயீந்துவிட்டேன் பற்றற்றானே
தேர்த்துவிட்ட ரிஷியென்றன் றலையிற்கையைத்
திறமாகவைக்கவென்று ஊதித்திட்டேனே. (௬௩)

உதித்திட்டேனீஸ்வரியா ளென்னைத்தேடி
யுறவானவிஷ்ணுவையும் போகச்சொன்னாள்
அளித்திட்டயீஸ்வரியைப் பார்த்துமாது
மகர்பயந்துபோனாரியான் போகேனென்றார்
களித்திட்டதன்மூல முபதேசித்துக்
கன்னிகைபோலாவாய் நீபோய்வாவென்றேன்
செளித்திட்டமாலுமந்தவடிவைக்கொண்டு
சிறப்பாகவென்னைத்தேடி வந்தாள்காணே (௬௪)

காணவேகன்னியைப்போல் வருகும்போது
காதலுடன் ரிஷிகண்டு மோகமுற்றான்
பூணவேசுகியில்லை யென்றுசொல்லிப்
புகழ்நியோகசுத்திசெய்து வாநீயென்றாள்
தோணவே தலைமுழுகித் தலைதுவட்ட
தொட்ட தலைதீப்பிடித்து வெந்ததையா
நாணவேகன்னிகைமால் வடிவமாகி
நம்மையுமேதாமறைத்தாள் நாம்வந்தோமே. (௬௫)

வந்துவிட்ட திருமாலைத் தானும்பார்த்து
வரம்பெற்றபிரம்மரிஷி யெங்கேயென்றேன்
வெந்துவிட்டான்ரிஷியவனு மென்றுசொல்ல
வெகுகெட்டிக்காரனென்று மெச்சினேன்யான்
தந்துவிட்டரிஷிதானுஞ் சாம்பலாகித்
தழும்பாயவ்வுயிர்வந்து தரையில்வீழ்க
அந்துவிட்டபையனா ரென்றுகேட்க
வழியோம்நாம்பரப்ரம்ம ரிஷியென்றானே (௬௬)

என்றவுடன்ரிஷியுந்தானென்னைப்பார்த்து
யென்றூலமழிந்துநானே புத்திகெட்டு
அந்தவரமெந்தனுக்கு வேண்டாமையா
வழியாதவரம்வேண்டு மென்றுகேட்டான்
நின்றவரமெந்தனுக்குக் கொடுக்கவென்றால்
நிலையாதநரலோகஞ் செல்வாயென்றேன்
வென்றவரம்வேண்டுமென்றாற் கலிபோய்தானே
விதமானசாத்தாவாய சொல்லென்றேனே. (௬௭)

செல்லென்றேனரலோகம் ரிஷிபோய்ச்சேர்ந்தான்
செயமானமாலையுந்தா னழைத்துக்கேட்டேன்
வெல்லென்றயிஸ்வரியா ளென்னைப்பார்த்து
விதமாகவள்ளூல மெனக்குச்சொன்னாள்
நல்லென்றகன்னிகையா யானுந்தோன்றி
நலம்பெறவேயவன்கைகொண் டெரித்தேனென்றாள்
மல்லென்றமாலவனை யானும்பார்த்து
மகத்தானமூலமொன்றெயீந்திட்டேனே. (௬௮)

ஈட்டிட்டேனிலக்குமியாள் சேர்ந்ததாலே
மீதமானசித்தியதின் மூலம்பார்த்து
பாய்ந்திட்டருத்திரனார் பட்டமீந்து
பரமானவட்சரமுந் தருவேனென்றான்
ஆய்ந்திட்ட திருமூல ருத்திரனைத்தானு
மழகானதெட்சணத்திற் செல்வாயென்றேன்
வாய்ந்திட்ட திருமூல ரென்னைப்பார்த்து
வளமானவம்பர மெங்கேயென்றானே. (௪௯)

எங்கையென்றான் தெட்சணத்திற்றருவேனென்றேன்
யெனக்கேவற்றின்னையொன்று வேண்டுமென்றான்
அங்கிருந்தோர்நந்திவந்து சமிப்பாயென்றே
ஆச்சரியமெல்லாந்தான் கேட்டுக்கொண்டான்
நங்கென்றகைலைமுத லண்டகூடம்
நன்மானமூலமுத லாதாரம்
வங்கென்றபரப்ரம்ம வரலாறெல்லாம்
வல்லபின்னையென்றுசொல்லி யுரைத்திட்டேனே (௫௰)

உரைத்திட்டேனிதுவெல்லா முள்ளத்துள்ளே
வெளியாகவுனக்குள்ளே யாணவென்றால்
திரைத்திட்டேனண்டத்திலுள்ளதெல்லாந்
திறமாகபிண்டத்திற் காண்பாயென்றேன்
வரைத்திட்டமாகபதி னேழுபேர்கள்
வந்திருப்பார்நந்திகளும் காலோகத்தில்
களைத்திட்டதீட்சைமுத லாதாரந்
கண்டுகொண்டு வவர்களுக்குச்செப்பென்றானே. (௫௧)

செப்பென்றவுத்தாரம் யானுங்கேட்டுச்
சிரசுதட்டபாதமதில் நமஸ்கரித்து
ஒப்பென்றதிரிசூல மழுவும்வாங்கி
யுயர்விடையின் மீதேறித்தேவர்சூழ
வெப்பென்றகைலாசந் தன்னைவிட்டு
விதமானதில்லை வனந்தன்னிற்சேர்ந்தேன்
நப்பென்றநரலோகம் பார்க்கும்போது
நாடெல்லாமிராக்கதாய் நான்கண்டேனே (௫௨)

கண்டவுடன் ராக்ஷதசம்மாரஞ்செய்து
கருப்பிடித்துவநேகவிதமாண் மெண்ணூக
மண்டலத்தில் திருஷ்டித்தேனவரையெல்லாம்
மகத்தானமலைகளெல்லா மிருக்கக்கண்டேன்
விண்டதொரு மலைகளெல்லாம் வேதமூன்றி
விதமானசிரகரிந்து சமித்துப்போட்டேன்
கொண்டதொரு தில்லைவனம் வெளியதாக்கி
குடியிருந்தபஞ்சலிக்கு வருட்சொன்னேனே. (ருக)

சொல்லிவிட்டேன் வியாக்கிரமபாதனுக்கு
செயமானவருள்காண வுபதேசித்தேன்
எய்துவிட்டேனவருமொருபிள்ளைக்குத்தா
னிதமானதீக்ஷயது செய்துவைத்தேன்
உய்துவிட்டுவெங்கிருந்து தவமேசெய்து
வுயரீசன்சொற்படியே வரமும்பெற்றேன்
கொய்துவிட்டே னியானிருந்தகோலமெல்லாங்
கூடினேனம்பரத்தி லாடினேனே. (ருஉ)

ஆடினேன்காலரித்தா னெந்தன்மைந்த
னுதிகாலங்கியென்று பேருமிட்டேன்
சாடினேனங்கிருந்து பொதிகைதன்னிற்
சந்தோஷித்தகஸ்தியனு மழைத்துக்கொண்டான்
கூடினேன்மயூரத்தின் வியரங்கேட்டார்
குருந்தமரத்தடி யிருப்பேன்வாவென்றேன்
தேடியென்னையகஸ்தியனும் வந்துகண்டு
தெரிசித்துப்பூசித்தம் பரங்கேட்டானே. (ருரு)

கேட்டவுடனங்கிருந்து சேவைதந்தேன்
கெடியானசிவவடிவ மாக்கிக்கொண்டேன்
ஆட்டமுடனகஸ்தியனுங் காணவென்று
வாடினேன்சித்தம் பலந்தன்னில்நின்று
நாட்டமுடன் காலாங்கிப் பிள்ளைவந்தான்
நலம்பெறவேநிருவிகற்ப சமாதிகேட்டான்
தேட்டமுடனவன்றனக்குச் சமாதிசொன்னேன்
தென்னிலங்கைதனிலிருந்து தேறினேனே. (ருசா)

தேறியேயெழுந்துவந்து பணிந்துநின்றான்
திரிகூடத்தீசான்யசாட்டிற் சென்றோம்
மாறியேவங்குமொரு சமாதிசொன்னேன்
மலைதனக்குவாயுவிலே மாதிநின்றான்
கூறியேயானுமதின் கிழக்காய்வந்து
குருமூலங்காலாங்கிக் குபதேசித்தேன்
மாறியேயிங்கிருநீ யென்றுசொல்லி
மலையாளதேசமிதை யான்சென்றேனே (௫எ)

சென்றிட்டேன் சேரமானென்னையுங்கண்டு
தெரிசித்தேயெந்தனையு மோக்ஷங்கேட்டான்
வென்றிட்டதலமாகா யானும்நின்று
விதமாகவவன்றனக்கு மோக்ஷமீந்து
கன்றிட்டகொல்லிமலைச் சாரிலிவந்து
காலாங்கிபிள்ளையையுமழைத்துக்கொண்டு
நன்றிட்டசதுரகிரி மலையிற்சென்றே
நல்லதொருபிள்ளைக் குபதேசித்தேனே. (௫அ)

தேனென்ற சித்திரகூடத்திற்சென்று
திறமானபிள்ளைரெண்டு யானுமாக
நானென்றகாவாங்கி பிள்ளைக்குத்தான்
நலமானப்ரம்மபட்டங் கிடைக்குமென்று
காமினென்றகைலாசந்தன்னிற்சென்றே
கமலனதுபட்டமதை யீசனீந்தான்
தாமினென்றபிள்ளைக்கு கர்ப்பமீந்து
தலஞ்செய்வாய்ச் சதுரகிரிதனிலென்றேனே. (௫௯)

என்றுநானங்கிருந்து வயிரகிரியிற்சென்றே
யிதமானபிள்ளை யொன்றுக் குபதேசித்தேன்
அன்றுநானுபதேசஞ் செய்தபிள்ளை
யழகானப்ரம்மபட்டந் தன்னையாண்டு
வென்றுமவ னம்பிடத்திலவந்துசேர்ந்து
விதமான்விஷ்ணுபட்டந் தனையுங்கேட்டான்
நன்றுடனேனீசனையும் பூசித்தாக்கால்
நலமானவப்பட்டம் வருமென்றேனே. (௬0)

இஷ்டமுடன் மாயவனார் கைலைசென்று
யீசனதுவிருதாளைப் பூசைசெய்ய
சட்டமாய்விஷ்ணுபட்டந் தன்னையீந்தார்
சமர்த்தான காலாங்கிப் பிள்ளைக்குத்தான்
இட்டமாய்ச துராகிரிப் பிள்ளைவந்து
இடசுத்திபண்ணிவந்தான் சட்டைதள்ளி
அட்டமாசித்தியெல்லா மவனுக்கீந்து
வதிகாரப்ரம்மபட்டமாமென்றேனே (௬௧)

ஆமென்றப்ரம்மபட்ட மீசனுமேயீந்தா
ரதிலிருந்தான் சட்டைப்ப னனேகநாளாய்
ஊமென்றவயிரகிரிப் பிள்ளையுங்கூட்டி
யுறவான நீலகிரி வந்துசேர்ந்தேன்
வானென்றவிஷ்ணுவுந்தா னங்கேவந்து
வந்தனைகள் செய்துருத்ர பட்டங்கேட்டான்
நாமென்ற தில்லைவனந்தன்னில்வந்தால்
நலமானருத்ரபட்டமாமென்றேனே (௬௨)

என்றதொருமூலமெல்லாமியானுஞ்சொன்னே
னிதமானருத்ரபட்டமீசனீந்தான்
அன்றதொருப்ரமமாவும்விஷ்ணுவாச்சு
வாச்சரியம்வயிரகிரிப்பிள்ளைக்குத்தான்
நன்றதொருப்ரம்மபட்டந்தன்னையீந்தார்
நலமானபிள்ளைரொண்டுக்குபதேசித்தேன்
வென்றதொருருத்திரனென்னிடத்தில்வந்தே
விதமானவெம்பரத்தில்விதிகேட்டானே (௬௩)

விதிகேட்டான்காலாங்கிபென்னைப்பார்த்து
விதமானவெள்ளிமலைதனில்போவென்றேன்
நதிமூலமென்னிடத்தில்வந்துகேட்டான்
நான்கொடுத்தேன் கமண்டலமுந்தெண்டுங்கையில்
பதிகேட்டகாலாங்கிவந்தனைகள்செய்து
பதிவானபிள்ளையொன்றுவேண்டுமென்றான்
திதிகொண்டபிள்ளைகளைப்பார்த்துநீயுந்
துணையாகவழைத்துவடஞ்செல்லென்றேனே. (௬௪)

செல்லென்றவுத்தாரம்யானுங்கேட்டுச்
சிவவேடமானதெல்லாந்தரித்துக்கொண்டு
வல்லென்றகமண்டலமுந்தெண்டுங்கொண்டு
வடமேலாய்ச்சென்றிட்டேன்மலையைப்பார்த்து
நல்லென்றபுவனகிரிபட்டணமேசேர்ந்து
நலமானபிள்ளையொன்றைத்தேடிப்பார்த்து
வெல்லென்றபிள்ளையொன்றுகாணாமற்றான்
விதமானகுருவருளைநினைத்திட்டேனே. (௬௫)

நினைத்திட்டேமூலகுருநாதன்பார்த்து
நிசமானபிள்ளையிருப்பிடமேசொன்னார்
அணைந்திட்டேனதுவிருக்கும்விடமேசென்றே
னஞ்சாறுபிள்ளையொருவீட்டிற்கண்டேன்
கனிந்திட்டப்பிள்ளைகளிலொன்றைப்பார்த்துக்
காடுமட்டுமழைத்துப்போய்வருவேனென்றேன்
பிறந்திட்டபேச்சையவன்றாயுங்கேட்டுப்
பொல்லாதசன்யாசிபோவென்றாளே. (௬௬)

போமென்றபிள்ளையதின்றாயைப்பார்த்து
புசிப்புக்குமனமுழன்றுதவிக்கின்றாயே
ஆமென்றபிள்ளைகளஞ்சாறுதன்னி
லாகுமென்றபிள்ளைகளைவைத்துக்கொண்டு
ஓமென்றபிள்ளையதாயொன்றுதந்தால்
வுன்பசியைத்தணிப்பனென்றுவுருதிசொன்னேன்
வாமென்றபிள்ளைகளையென்முன்விட்டு
வாகானபிள்ளைதனைக்கேளென்றாளே. (௬௭)

கேளென்றாள்கிழிக்கட்டிநூறுபொன்னைக்
கெடியாகவவடனக்குக்கொடுத்துப்போட்டு
ஆளென்றபிள்ளையொன்றையழைத்துக்கொண்டு
யழகானகைலைகிரிமலையிற்சென்றேன்
வாணென்றமனிதருக்குஞானமில்லாதாலே
வலுவானபிள்ளைகளுங்கிடைக்கவில்லை

மென்றவிஷமான வாசைதன்னிச்
சிதைவுபதேசமைந்து செப்பினேனே. (எ௨)

ப்பினேன் கற்பமுதற் றீசையெல்லாஞ்
செகசாலவித்தைதெல்லா மறியச்சொன்னேன்
ப்பினேனென்றுசொல்லி கர்ப்பங்கொண்டு
தலைசாலுங்நான் தாமேகண்டுக்கொண்டேன்
ப்பில்லாமூவர்தெரிசனமே கேட்டான்
வுலகத்திற்றில்லைவனந் செல்லாயென்றேன்
மப்பினேனென்றவனும் வணக்கஞ்செய்து
வேதாந்தத் திறவுகோற் கைக்கொண்டானே (எ௩)

கைகொடுத்த குருவையுந்தான் வணங்கியானும்
காலறிந்து மூலையுங் கண்டுக்கொண்டு
கைகொடுத்துபிள்ளைகளை யானும்பார்த்து
சந்தோஷமாகவே தழுவிக்கொண்டு
ஐகொடுத்தவனுமுகந்தாற் சந்தோஷித்து
வாச்சரியமாய்ப்பொன்னம் பலவாயென்று
உய்கொடுத்த வீசனிடஞ் செல்வாயென்று
வுறுதியாய்க்கவனமது கொடுத்தார்தானே (எ௪)

தானென்றகவனத்தாற் சென்றேனியானுந்
தப்பாமலாயிரத்தெண் யோசனையதாக
மூனென்றமூச்சினிலு லப்படியேசென்று
முடியானகைலாச முடியிற்சென்றேன்
வானென்றகைலைசத்தி வலவாய்வந்து
வல்லசிவன்சத்திபதம் வணங்கின்றேன்
வனென்ற நீயாரானென்று கேட்க
வெந்தனது மூலர்திருப்பேர் சொன்னேனே. (எ௫)

சொன்னதொரு மொழிகேட்டு வீசன்றானுஞ்
சுந்தரியைப்பார்த்துமிவன்சகத்தானென்றார்
அன்னையுந்தானெனையழைத்து முத்தமிட்டு
வதிகாரப்ரம்மபட்ட மருளிச்செய்தான்
முன்னையுந்தானிருந்தவொருப்ரம்மாவைத்தான்
முடிவானவடபுரமே போநீயென்றான்